அதைத் தள்ளவேண்டும். இக்கப்பலை ஓட்டிய துடுப்பாட்கள் பெரும்பாலும் ஆயுட்கால சிட்சை பெற்ற அடிமைகளே. பாவம். இந்த அடிமைகள் ஒரு பொருட்டாக மதிக்கப்படாமல் மிகவும் குரூரமாக நடத்தப்பட்டார்கள். இவர்களை மேற்பார்வையிடும் கண்காணி ஒருவன் மேலே நின்றுகொண்டு அடிக்கடி இவர்களை அடித்து வேலைவாங்குவது வழக்கம்.

மற்றொருவகையான வியாபாரக் கப்பலுக்குத் துடுப்பு ஆட்கள் இல்லை. இது பாய்மரத்தின் உதவியால் ஓடியது. இக் ப்பலின் பக்கத்தில் சுக்கான் அமைக்கப்பட்டிருந்தது. இந்த ரோம வியாபாரக் கப்பலிலிருந்துதான் தற்கால நீர்ப் படகுகள் வந்துள்ளன. ஏறக்குறைய சீர்திருத்தம் செய்யப்பட்ட ரோம வியாபாரக் கப்பலே நவீன படகு என்று சொன்னால் மிகையாகாது. பாய்மரங்களை வரிசையாக அமைப்பதிற்றான் சீர்திருத்தம் ஏற்பட்டது. காற்றுக்குப் பதிலாக நீராவியை உபயோகிக்கக் கண்டுபிடித்த பத்தொன்பதாம் நூற்றாண்டின் முதல் முப்பது ஆண்டுகள் வரையிலும் குறிப்பிடத்தக்க மாறுதல் எதுவும் உண்டாகவில்லை. நீராவியைப் பயன்படுத்தும் வழக்கம் கப்பற்றொழிலில் புகுந்ததும் கப்பற்றொழிலில் ஆச்சரியமான மாறுதல்கள் ஏற்பட்டுவிட்டன.

## ப்பற்கலை வளர்ச்சி வரலாறு

பத்தொன்பதாவது நூற்றாண்டுக்குமுன் கப்பற்கலையில் சீர்திருத்தங்கள் மெதுவாகவே தோன்றி வந்துகொண்டிருந்தன. கப்பற்கலை வளர்ச்சியைப்பற்றி ஆராய்வோமானால் சீர்திருத்தங்கள் பல நூற்றாண்டுகளாக நுழைந்துகொண்டுவந்ததை நன்கு காணலாம்.

ஏறக்குறைய சரிதகாலத்துக்கு முன்னிருந்தே கிழக்கே இந்தியர்களும் அரபியர்களும், மேற்கே பொனீஷியர்களும்

கப்பல் ஓட்டும் திறமையிற் சிறந்து விளங்கினார்கள். இவர்களிடத்தில் கடலாட்சி இருந்துவந்தது. கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டுபிடிப்பதற்கு முன்னமே இந்திய மாலுமிகள் அமெரிக்காவின் சில பாகங்களை அறிந்திருந்தார்கள். டயாஸும் வாஸ்கோடகாமாவும் இந்தியாவிற்குக் கடல்மார்க்கத்தைக் கண்டுபிடிக்க நினைக்காததற்கு முன்னமே எகிப்து அரசனாகிய இரண்டாம் நிக்கோவிடத்தில் (Necho II) வேலை பார்த்துவந்த பொனீஷிய மாலுமிகள் ஆப்பிரிக்காவைச் சுற்றிப் பிரயாணஞ் செய்தது உண்டு.

பொனீஷியர் வியாபாரம் செய்யும்பொருட்டுக் கடலில் நெடுந்தூரம் பிரயாணஞ் செய்துள்ளார்கள். ஆப்பிரிக்காவின் கரையிற் குடியேறி நாடுகளையும் ஸ்தாபித்தார்கள். அவர்கள் ஸ்தாபித்த குடியேற்ற நாடுகளில் ஒன்றுதான் ார்த்தேஜ் (Carthage) என்பது. இது செல்வமும் பலமும் பொருந்திய நாடாக விளங்கிற்று. இன்னும் அவர்கள் ஹெர்குயுலீஸ் தூண்கள் எனப்படும் ஜிப்ரால்டர் கால்வாயை கடந்து ஸ்பெயினுக்குச் சென்று அங்கே கேடிஸ் (Cadiz) என்னும் ஊரையும் ஸ்தாபித்தார்கள்; அதன்பின் அவர்கள் பிரித்தானிய நாட்டுக்கும் சென்றார்கள். பின்னால் வந்த பிரித்தானியரைப்பற்றிக் கூறுவது, முன்னிருந்த பொனீஷியருக்கும் பாதியளவு ஏற்றதாயிருந்தது. ஆங்கிலரைப் போலவே பொனீஷியர்களும் எங்கெங்கே போனார்களோ அங்கங்கே நாடுகளை ஏற்படுத்தி வியாபாரத்துக்கும் வழி செய்துகொண்டார்கள். கார்த்தேஜ் ரோமர்ளால் அழிக்கப்பட்டதும், பொனீஷியர்களுடைய பலம் குறைந்தது. அவர்கள் அழியவே, கப்பல் செய்யும் கலையும் கப்பலோட்டும் வித்தையும் மறைந்தன.

நாம் முன்னமே இரண்டு வகையான கப்பல்களைப் பார்த்தோம். பல நூற்றாண்டுகளாக இந்த இரண்டுவகையான கப்பல்களிற்றான் சீர்திருத்தங்கள் ஏற்பட்டன.

தண்டுவலித்தோடும் கப்பல் சண்டைக் கப்பலாகவே உபயோகப்பட்டு வந்தது. பாய்மரக்கப்பல் வியாபாரக் கப்பலாகவே இருந்து வந்தது. நெடுங்காலமான பின்னர் இத்தாலியக் குடியரசு மடிந்த பிறகு, ஐரோப்பாவிற் சில ராஜ்யங்கள் தலையெடுக்க ஆரம்பித்த காலத்தில், ஆங்கில நாடு, ஸ்பெயின் தேசம், உலாந்து தேசம் ஆகிய இந் நாடுகளின் மாலுமிகளுக்குள் ஏற்பட்ட சச்சரவுகளால் கப்பற்கலைக்குப் புதிய பலம் வந்தது.

கப்பற்கலைக்குப் புத்துயிர் வந்ததற்கு முக்கிய காரணம் ஒன்று உண்டு. அது இந்தியாவிற்கு வரும் தரைமார்க்கம் அடைபட்டதேயாகும். நம் இந்தியாவில் தங்கமும் பட்டும் அரியவாசனைத் திரவியங்களும் கிடைத்ததால், ஐரோப்பிய நாட்டினரிற் பலர் இதைக் கைப்பற்றித் தங்கள் செல்வத்தைப் பெருக்க எண்ணினர். ஜெனோவா மாலுமிகளுக்குத் தங்கள் நாட்டில் ஆதரவும் பணவுதவியும் கிடைக்காமையால், அவர்கள் அக்காலத்தில் ஐரோப்பிய நாடுகளில் தலைமைபெற்றிருந்த போர்ச்சுகல் மன்னர்களிடத்தில் வேலைபார்த்துவந்தார்கள். இந்த அரசர்களில் முக்கியமானவர் ஹென்றி என்னும் போர்ச்சுகல் மன்னர். இவருக்குப் பௌதிக ஆராய்ச்சியிலும் புதிய இடங்களைக் கண்டுபிடிப்பதிலும் ஊக்கம் மிகுந்திருந்ததால், இவர் தம்மிடம் வந்த ஜெனோவா மாலுமிகளைச் சேர்த்து, ஆப்பிரிக்காவைச் சுற்றி வருமாறு அனுப்பினர். அம்மாலுமிகள் மடீரா, அசோர்ஸ் முதலிய சில இடங்களைக் கண்டுபிடித்தார்கள்.

புதிய இடங்களைக் கண்டு பிடிக்கக் கடல் யாத்திரை செய்த மாலுமிகளிற் பெரும்பாலோர், முன்னமே தெரிந்த இடங்களுக்குச் சிறிது தூரமே செல்ல முயன்றார்கள். தெரியாத இடங்களைச் சிறிது சிறிதாக 'அவர்கள் கண்டு பிடிக்கப் பார்த்தார்கள். மேற்குப் பக்கமாகப் போனால் இந்தியாவுக்குக் கடல் மார்க்கமாகச் செல்ல வழி கண்டு

பிடிக்கலாம் என்ற நம்பிக்கை மாத்திரம் எல் ா மாலுமி களுக்கும் இருந்தது. ஆனால், ஒருவரும் முன் பின் வழி தெரியாத பெருங் கடலிற் சென்று வழி கண்டுபிடிக்கத் துணியவில்லை. கோலம்பஸ் மாத்திரம் பூரண நம்பிக்கை யோடும் அச்சமற்ற தைரியத்தோடும் மூன்று கப்பல்க ளுடன் மேற்குப் பக்கமாகப் புறப்பட்டார். அவர் கொண்டு போன கப்பல்களில் மிகப் பெரியது இக்காலத்து ஆற்றுப் படகைப் பார்க்கிலும் பெரியதாய் இருந்திராது. இப்படிப் பட்ட கப்பலிற் சென்றுதான் கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டுபிடித்தார்.

அமெரிக்காவைக் கண்டுபிடித்ததிலிருந்து கப்பற்கலை அதிதீவிரமாக முன்னேறியது. இதைக் கண்டுபிடித்த முப்பது ஆண்டுகளுக்குள் வாஸ்டே ரட ா ா நன்னம்பிக்கை முனையின் பக்கமாய்ச் சுற்றிவந்து இந்தியாவிற்குக் கடல் மார்க்கத்தைக் கண்டுபிடித்தார். டே ஜேலன் என்பவர் விடா முயற்சியுடன் பல கஷ்டங்களுக்கு இடையில் உலகைச் சுற்றிவந்தார். இங்கிலாந்தை ஆண்ட எலிசபெத் இராணியாரின் ஆதரவின்கீழ் டிரேக் (Drake) ஹா கின்ஸ் (Hawkins) பிரபிஷர் (Frobi her) ஆகிய இவர்கள் ஸ்பெயின் தேசத்து மாலுமிகளைப் போலவும் போர்ச்சுகல் தேசத்து மாலுமிகளைப் போலவும், பயமின்றிக் டற் பிர யா ம் செய்தார்கள். இந்த காலமெல்லாம் கப்பல் செய் வதில் மெதுவாகச் சீர்திருத்தங் ள் நுழைந்துகொண்டே வந்தன. பெருங்காற்றையும் கொந்தளி கும் கடலையும் எதிர்க்க மாலுமிகளுக்கு அடங்காத உற்சாகம் இருந்தது. ஆகையால் அவர்கள் காற்றின் கொடுமையையும் அலைக்குங் கடலின் கோபத்தையும் வெல் வழி கண்டுபிடிக்கப் பாடு பட் டார்கள். கடற்பிரயாணத்தில் மாலுமிகள் பட்ட கஷ் டங்கள், அடைந்த வெற்றிகள் ஆகிய இவைகளைப்பற்றி நெடுங்கா மாக இருந்துவந்த கர்ணபரம்பரையான க த

கள் இந்தப் பதினாறாம் நூற்றாண்டில் எழுந்தன. இக் கதைகள் இன்றும் மாலுமிகளுக்கு உற்சாகம் ஊட்டக்கூடிய சாதனமாயுள்ளன.



Reproduc d by p rmi ion of the Director of the Sci nce Mu um, South Kensington, London

எலிசபெத் ராணியார் காலத்துக் கப்பல்

பதினாறாம் நூற்றாண்டுக்கும் பத்தொன்பதாம் நூற்றாண்டுக்கும் இடையில், ஐரோப்பியர்கள் புதிய புதிய இடங்களைக் கண்டுபிடிப்பதற்குக் கடல் யாத்திரைசெய்து, அநேக இடங்களைச் சிறிது சிறிதாகக் கண்டுபிடித்து அந் நாடுகளிற் குடியேறினார்கள். இப்படிக் கண்டுபிடித்த இடங்களில் முக்கியமானது ஆஸ்டிரேலியா. குக் (Cook) என்னும் ஆங்கிலநாட்டு மாலுமிதான் இதைக் கண்டுபிடித்தார். ஆஸ்டிரேலியாவைக் கண்டுபிடித்ததை நாம் முக்கியமான சம்பவமாகவே நினைக்கவேண்டும்.

டத்தொன்பதாவது நூற்றாண்டு கப்பற்றொழிற்கலைக்



By k'nd permi sion of the Cuna d St  mship Co., Ltd.
தற்காலப் பிரயாணிக் கப்பல் : அக்விடேனியா

குச் சிறந்த காலமாக விளங்கியது. இக்காலத்திற்றான் ஆச்சரியமானவைகளும் ஒரு நூற்றாண்டுக்குமுன் நாம் மனத்தாலும் நினைக்கமுடியாதவைகளுமான பலவகைக் கப்பல்கள் தோன்றின. பிரீமென் (The Bremen), அக்விடேனியா (The Aquitania), மெஜெஸ்டிக் (The Majestic) என்பவை போன்ற கப்பல்களை உதாரணங்களாகக் குறிப்பிடலாம். இவைகள் நாற்பதினாயிரம் முதல் ஐம்பதினாயிரம் ன் வரை பாரத்தைத் தூக்கிச் செல்கின்றன.



Photo: Elder, D mp ter & Co.

நவீன மோட் ார்ப் பட்கு: 'அக்ரா

நாலைந்து நாட்களுக்குள் ஐரோப்பாவிலிருந்து அமெரிக்காவிற்குப் போகின்றன. ஒருவன் அநுபவிக்க வேண்டிய எல்லாவிதமான சௌகரியங்களையும் இக்கப்பல்களிற் பிரயாணஞ் செய்துகொண்டே அநுபவிக்கலாம்; பார்க்கக்கூடிய வேடிக்கைகளையும் பார்த்துக் களிக்கலாம்.

## வீன பு க் ப்பல்கள்

இக்கப்பல்களைப் போன்றவை பல உண்டு. உலகத்தில் கப்பற்றொழிற்சாலைகளில் இக்காலத்தில் செய்யப்படும் பல

வகையான கப்பல்களைப்பற்றி இங்கு விரித்துக் கூறுதல் முடியாது. போர் செய்யும் ாலத்திலும் மற்றக் காலத்திலும் எந்தெந்தக் காரியத்துக்கு வேண்டுமோ அந்தந்தக் காரியத்துக்கும் பயன்படுமாறு கப்பல்கள் உண்டு. ஸர் ஹென்றி ஸீகிரேவ் (Sir Henry Seagrave) என்பவர் மணி ஒன்றுக்கு நூறு மைல் வேகமாகச் செலுத்திய மோட்டார்ப் படகு முதல் ஆஸ்டிரேலியாவின் விளை பொருள்களை லங்காஷையர் தொழிற்சாலைகளுக்கு எடுத்துச் செல்லும் கனமான சரக்குக் கப்பல் (cargo boat) வரையிலும், விரைந்தோடும் காவற்கப்பல் (cruiser) முதல் பலமான டிரெட்னுட் (Dreadnought) வரையிலும் தொகுத்துக் கூறமுடியாதபடி அநேக வகையான கப்பல்கள் உண்டு.

புதுப்பொருள் கண்டு பிடிக்கும் பேரறிவாளனுக்குத் தடையாயிருப்பது ஒன்றும் இல்லை. அவன் எதையும் செய்யலாம். ஆனல், கப்பல் செய்வதில் மாத்திரம் அவனுக்குத் தடை உண்டு: ஒரு தேசத்தில் எவ்வளவு பொருள் வருவாய் உண்டோ அவ்வளவுக்குத் தகுந்தபடி தான் கப்பல்கள் செய்யப்படும். கப்பல்கள் பெரியனவாய் இருப்பினும் சிறியனவாய் இருப்பினும் அவைகளை ஏராளமான பொருள் செலவிட்டே செய்தல் வேண்டும். பிரயாணிகள் ஏறிச்செல்லும் கப்பல் ஒன்று ட்டுவதற்குப் பல லக்ஷக்கணக் ான பொருள் செலவிடவேண்டுமாம். சாதாரணமா ப் போகும் வேகத்தைவிட ஒரு ப்பல் அதிக வேகமாகப் போகவேண்டுமானல் ஒரு சாதாரணக் கப்பல் செய்யச் செலவாகும் பொருளைவிட அதற்கு இரு மடங்கு பொருள் செலவாகும்.

சௌகரியம் அளிக்கும் பலவிதமான கப்பல்களைப் பார்க்கினும் வியாபாரப் பொருள்களை ஏற்றிச் செல்லும் சரக்குக் கப்பல் ஒரு பிரமாண்டமான பெட்டியைப்

போலிருக்கிறது. இதில் உள்ள ஒவ்வொரு அங்குல இடமும் பணமே. ஆனால், இப்படிப்போன்ற கப்பலைப் பலமாகச் செய்வதுதான் பெருங்கஷ்டம். இதில், கூரையில் மரம்போடுவதுபோல் கப்பலின் பக்கங்களில் நெடுக மரங்களைப் போட்டுப் பலப்படுத்தினால் இம்மரங்கள், சாமான்களை உள்ளே போடும்போதும் வெளியே எடுக்கும்போதும் தடுக்கும். இம்மரங்களைக் குறுக்காகப் போட்டுக் கப்பலைப் பலப்படுத்தாவிட்டால் தண்ணீரின் வேகத்தால் கப்பலின் பக்கங்கள் உடைந்துபோனாலும் போகும். பல நூற்றாண்டுகளாகப் பெற்ற அனுபவத்தாலும் திறமையாலும் இப்போது இச்சரக்குக் கப்பல்கள் சிறந்தவைகளாகச் செய்யப்படுகின்றன. இக்காலத்தில் ஒவ்வொரு வகையான சரக்குக்கும் ஒவ்வொரு வகையான கப்பல் உண்டு. உதாரணமாக, மாமிசம், முட்டை, பழம் ஆகிய இவைகளைக் கொண்டுபோகும் ஒருவகைக் கப்பலைக் கூறலாம். இவ்வகைக் கப்பலில் பிரமாண்டமான அறைகள் இருக்கின்றன. இவ்வறைகளில் ஒரேவிதமான உஷ்ணநிலை இருக்கும். வெயிற்காலத்தில் உஷ்ணப் பிரதேசங்களில் இக்கப்பல்கள் போனாலும் அப்பிரதேசங்களின் உஷ்ணம் இக்கப்பல்களில் உள்ள பொருள்களைத் தாக்குவதில்லை. இவைகளில் குளிர்ச்சி அளிக்கும் யந்திரம் ஒன்று உண்டு. அது செயற்கைக் குளிர்ச்சியை உண்டுபண்ணுகிறது. இந்த யந்திரம் கெட்டுச் சிறிது நேரம் வேலை செய்யாது போனால் ஆயிரக்கணக்கான பவுன் மதிப்புள்ள சரக்குகள் அழிந்துபோகும். சரக்கு அறைகளிற் குளிர்ச்சி இருக்கச் செய்யவேண்டியதோடு வெளி உஷ்ணமும் இவற்றைத் தாக்காதவாறு பார்த்துக்கொள்ள வேறு வகையான யந்திரங்களும் இவற்றில் உண்டு.

## நீர்மூழ்கிக் கப்பல்

சண்டைக் கப்பல்கள் எல்லாவற்றிலும் மிகவும் விநோதமானது நீர்மூழ்கிக் கப்பல் (Sub marine) ஆகும். 1873 ல் ஜூல் வேர்ன் (Jules Verne) என்னும் பிரான்சு நாட்டு விஞ்ஞான நூலாசிரியர் 'கடலின் கீழ் இருபதினாயிரம் லீக்' என்னும் கதைப் புத்தகம் ஒன்று எழுதினார். இக்கதையில் அவர் நீருக்குள்ளே செல்லும் கப்பலைப்பற்றி வருணித்தார். அந்நூலில் அவர் அக்கப்பல் வேலை செய்யும் நுணுக்கங்கள் எல்லாவற்றையும் விவரமாகக் கூறியிருந்த போதிலும், ஒருவரும், அனுபவத்தில் வரக்கூடியதாக இருந்த அதைப் பொருட்படுத்தவில்லை. அது பயங்கரமான கனவுபோல் தோன்றியது. ஆனால், அமெரிக்காவில் உள்ள குடியேற்ற நாடுகள் சுவாதீனம் பெறும்பொருட்டு இங்கிலாந்தோடு செய்த சுதந்தரப் போரில் பூஷ்னேல் என்பவர் இம்மாதிரியான கப்பல் ஒன்றை மரத்தாற் செய்தார். அதன் பின்பக்கத்தில் வெடிமருந்து வைக்கப்பட்டிருந்தது. அது ஆங்கிலருடைய சண்டைக் கப்பல்கள் நின்ற இடத்துக்கு நீர்க்குள்ளேயே சென்று அங்கு வெடிமருந்தை வைத்துவிட்டுத் திரும்பியது. ஆனால், அதன் முயற்சி வீணாயிற்று. ஆயினும், பூஷ்னெல்லின் கருத்துப் பலப்பட்டு விட்டது. கதையாயிருந்தது கைகூடும் கருத்தாக முடிந்தது. அமெரிக்க நாட்டில் நடந்த உள்நாட்டுப் போர்களில் நீர்மூழ்கிக் கப்பல்களைக்கொண்டு செய்த பரிசோதனைகள் வெற்றியுற்றன. இப்போது நீர்மூழ்கிக் கப்பல் உலகத்தில் உள்ள ஒவ்வொரு தேசத்தின் கடற்படைக்கும் முக்கியமான உறுப்பாகிவிட்டது.

நீர்மூழ்கிக் கப்பல் பெரும்பாலும் தட்டை வடிவமான புகையிலைச் சுருட்டை ஒத்திருக்கும். இது தண்ணீரிற் பாதியளவு மூழ்கியிருக்கும்போது இதன் தட்டையான பாகத்திற்றான் கப்பல் உத்தியோகஸ்தர்களும் கப்பல் வேலையாட்

களும் இருப்பதுண்டு. இத்தட்டையான பாகத்துக்குமேல் சிறு கோபுரம் போன்றது ஒன்று காணப்படும். இக் கோபுரத்தின் வழியாகவே யாவரும் கப்பலுள் நுழைதல்வேண்டும். இதன் பக்கத்தில் 'புனல் போன்றது ஒன்று உண்டு. இது ஆங்கிலத்தில் 'பெரிஸ்கோப் எனப்படும். இதுதான் நீர்மூழ்கிக் கப்பலுக்குக் கண்போன்ற முக்கிய உறுப்பாகும். நாம் இதை நீர்மூழ்கிக் கப்பலின் கண் என்று கூறலாம். இப் 'பெரிஸ்கோப், சுற்றியுள்ள பொருள்களின் உருவங்களைப் பிடித்துக் காட்டுமாறு சுற்றிலும் கண்ணுடிகளும் கண்ணுடிச் சில்களும் (lens) அமைக்கப்பட்டுள்ள நீளமான குழாயாகும். நீர்மூழ்கிக் கப்பல் தண்ணீரில் மறைந்திருக்கும்போது 'பெரிஸ்கோப்' என்னும் இக்குழாயின் முனை தண்ணீருக்குமேல் சிறிது தலைதூக்கி நின்று ஏறக்குறையப் பதின்மூன்று மைல் தூரம் சுற்றிலும் செல்லக்கூடிய கப்பல் முதலான பொருள்களின் உருவங்களைக் காட்டிவிடும்.

கப்பற்றலைவனுடைய அறையின் கீழே ஒரு வெள்ளைக் காகிதம் இருக்கும். பெரிஸ்கோப்பில் காணும் உருவம் பலமுறை பிரதிபிம்பித்து இந்த வெள்ளைக் காகிதத்தில் விழும். இப்படி விழும் உருவங்கள் ஒளிப்படத்தீபத்திலிருந்து (Magic Lantern) திரையிற் போய்விழும் உருவங்களை ஒத்திருக்கும். நீர்மூழ்கிக் கப்பலில் 'பெரிஸ்கோப்' என்னும் கருவி இல்லாமற்போனால் அது ஒன்றுக்கும் பயன்படாது.

நீர்மூழ்கிக் கப்பலை இயக்குதற்கு அதில் எஞ்சின்கள் உண்டு. இந்த எஞ்சின்களுக்கு நிலக்கரியை உபயோகித்தால் புகை வெளியே வரும். யாராவது புகையைக் கண்டு கப்பல் இருக்கும் இடத்தைக் கண்டுபிடிக்கலாம். ஆகையால் இப்படி ஒன்றும் நிகழாதிருக்குமாறு இந்த எஞ்சின்களில் நிலக்கரி உபயோகிப்படாமல் சுத்தம் செய்யப்பட்ட பெட்ரோலியமாகிய காஸொலீன் (gasoline) உப

யோகிக்கப்படுகிறது. நீர்மூழ்கிக்கப்பல் தண்ணீரில் மூழ்கியதும் உள்ளிருக்கும் பிராணவாயு அசுத்தமாகாதிருக்குமாறு எஞ்சின்கள் நிறுத்தப்படும். கப்பலில் முன்னமே தொகுத்துவைத்துள்ள மின்சாரத்தின் உதவியால் எஞ்சின்கள் வேலைசெய்து கப்பலை நீர்க்குள் இயக்கும். நீர்க்கீழிருக்கும்போது கப்பலிலுள்ளோர் உட்கொள்ளும்பொருட்டுப் பிராணவாயு, அது அழுத்தமாக அடைக்கப்பட்டுள்ள குழாயிலிருந்து, சிறிது சிறிதாக வெளிவரும். அவர்கள் இப்பிராண வாயுவை உட்கொள்வதற்கு அது ஏற்ற நிலையில் சுத்தமாயிருக்கிறதா இல்லையா என்று அறிவதற்குக் கப்பலில் மானோமீட்டர் (Mano meter) என்னும் கருவி ஒன்று இருக்கிறது.

நீர்மூழ்கிக் கட்டல் முக்கியமாய் எதிரிகளின் கப்பல்களைத் தாக்கி உடைக்க உபயோகப்படுத்தப்படுகிறது. பிறர் இதைத் தாக்கினால் அவர்களிடமிருந்து தப்பிக்கொள்ளும் சக்தி இதற்கு இல்லை; ஏனென்றால் இதனிடத்தில் சிறிய பீரங்கியே இருக்கிறது. எதிரிகளோடு போர்புரிய வேண்டுமென்றால் இதனிடம் பல பெரிய பீரங்கிகள் இருக்கவேண்டுமல்லவா? அவைகள் இதனிடம் இல்லை. அவைகளை இதில் வைத்தாலும், கடல்மேல் நடைபெறும் பலவகைச் சூழ்ச்சிகளை அறிய வேகமாய் ஓடக்கூடிய நிலையில் இது இராது. இது வேகமாய் ஓடுவதோடு சப்தமின்றியும் ஓடவேண்டும். திருட்டுத்தனமாய்ப் போனால்தான் இது தப்பிப்பிழைக்கும்; இல்லாவிட்டால் டலுள் ஆழும்; ஏனென்றால் வேறொரு ப்பல் இதன்மேல் சிறிது பட்டாலும் இதனுடைய எலும்பு மூடி டைந்துபோகும். ஆகையால்தான் இது எப்பொழுதும் கள்ளத்தனமாகவே போகவேண்டும்.

நீர்மூழ்கிக் கப்பலில் இரண்டு ஜதைச் சுக்கான்கள் உண்டு. ஒருஜதை சாதாரணமான முறையில் ப்பலை வலப்புறமாகவும் இடப்புறமாகவும் செலுத்தும். மற்றொரு

ஜதை நீர்மட்டத்துக்குச் சரியாக இருந்து கப்பலை நீரில் மூழ்கவும் மேலே எழவும் செய்யும். கப்பல் நீரின் ஆழத் தி் ஓடுவது அதன் பலத்தைப் பொருத்திருக்கிறது. அது தன் பலத்துக்குத் தக்கபடி ஆழத்தில் ஓடும். எவ்வளவு ஆழத்தில் கப்பல் ஓடுகிறது என்று காட்டுதற்கு நீரின் அழுத்துஞ் சக்தி யளக்குங் கருவி ஒன்றும் அதில் அமைக் கப்பட்டிருக்கிறது. அக்கருவி கப்பல் இவ்வளவு ஆழத்தில் ஓடுகிறது என்று ாட்டும். நீர்மூழ்கிக் கப்பலைத் தண்ணீரில் நிறுத்திவைத்தல் முடியாது. அது மேலோ கீழோ முன்னே பின்னே ஓடிக்கொண்டேயிருக்கவேண்டும். மற் றக் கப்பல்களைப் போல் அதை நீர்மட்டத்துக்கு மேலே தான் நிறுத்துதல்கூடும். இல்லாவிட்டால் அது கடலுக்கு அடியிற்போய் நிற்கவேண்டியதுதான்.

பகைவர் கப்பலைத் தாக்கும்பொருட்டு நீர்மூழ்கிக் கப் பலில் வைக்கப்பட்டிருக்கும் கொடிய ஆயுதத்துக்கு டார்ப் பீடோ என்பது பெயர். டார்ப்பீடோ என்பதும் ஒரு சிறிய நீர்மூழ்கிக் கப்பலே. இதில் ஆட்கள் இல்லை. இது தானகவே ஓடும். இதில் கூர்மையான ஊசி உண்டு. இந்த ஊசியின் முனை இரும்பு மூடியால் மூடப்பட்டிருக்கும். இது பகைவர் ப்பலைத் தாக்கப் போகும்பொழுது இதை மூடி யுள்ள மூடி தானகவே கழன்றுவிடும். கப்பலைத் தாக்கு வதற்குள் ஊசியும் வெளிவந்துவிடும். கப்பலின் கடின மான பாகம் இதில் பட்டதும் இந்த ஊசி டார்ப்பீடோவில் உள்ள வெடிமருந்தை வெடிக்கச்செய்து மிகவும் பலமான சண்டைக் கப்பலையும் தூள் தூளா உடைத்தெறியச் செய்கின்றது. ாரியம் வெற்றியுறுவதும் தோல்வியடைவ தும் நீர்மூழ்கிக் கப்பலின் ப க்த் துவாரத்திலிருந்து பார்த்து விடும் குறியையே சார்ந்துள்ளது.

கப்பல் முன்னேற்றத்தால் ' ட பல '

நீராவிக்கு இயக்குஞ் சக்தி உண்டு என்று கண்டு பிடித்ததிலிருந்து மனிதன் போக்குவரத்துச் சாதனங் ளிற் பெரிய மாறுதல்களைப் புகுத்திவிட்டதை நீங்களே அறிந்து கொண்டுள்ளீர்கள். இக்காலத்தில் மனிதனுக்குத் தூரத்தைப்பற்றிக் கவலை இல்லை. பூமியில் உள்ள இடங்கள் எல்லாம் இணைக்கப்ப டுவிட்டன. எதுவும் புதுமையாகவும் இல்லை; தெரியாததாகவும் இல்லை. இந்தியாவின் கடைகளில் மேனுட்டு மரங்களின் பழங் ள் மரங்களிலிருந்து அறுத்ததும் புதியவைகளாகக் கொண்டுவரப்பட்டு விற் ப் படுகின்றன. அது போலவே கீழ்நாட்டிற் கிடைக்கும் விளை பொருள்களும் மேனுட்டுக் கடைகளில் விற்பனை 'குச் சித்தமாய் இருக்கின்றன. உலகமே இப்போது ஒரு பெரிய கடைவீதியாக இருக்கிறது. மக்கள் யாதொரு ஷ்டமும் இல்லாமல் மனத் திருப்தியோடு பொருள்களை வாங் வும் விற்கவும் செய்கிறார்கள்.

அத்தியாயம் IV

# ஆ ாய வி

## பறக்க முயற்சி

**நா**ம் பண்டை இதிகாசங்களாகிய இராமாயண பாரதங்களில் அரசர்கள் விமானங்களில் ஏறி ஆ ாயமார்க்கமாகச் சென்றதாகப் படிக்கிறோம். அயோத்தி மன்னனாகிய இராமபிரான் இராவணனை இலங்கையில் வென்ற பின்பு நாயகி சீதாபிராட்டியோடும் தம்பி இலக்குமணனோடும் நண்பன் ஹனுமானோடும் அயோத்திக்கு விமானத்திற் பறந்து சென்றதாக இராமாயணம் கூறுகிறது.

இக்கதையை உண்மை என்றாவது பொய் என்றாவது

சொல்வது மிகவும் கடினம். இந்துக்கள் ஆகாயத்திற் பறந்து செல்லும் வித்தையை அறிந்திருந்தபோதிலும் அது சரித்திரத்தில் எழுதப்படுவதற்குமுன் மறந்து போயிருத்தல்கூடும். ஆனால், அக்கதை மக்கள் பறவையினத்தோடு போட்டியிட்டுப் பறக்க ஆசைப்பட்டார்கள் என்பதையும், வானவழியாக வேகமாயும் நாகரிகமாயும் செல்வது இன்பமாயிருக்கும் என்று அவர்கள் உணர்ந்தார்கள் என்பதையும் காட்டுகிறது. உண்மைக்காலத்திலிருந்தே சிலர் ஆகாயத்திற் பறக்கவும், ஆகாயத்திற் பறப்பது எத்தகைய உணர்ச்சியை அளிக்கும் என்பதை அறியவும் முயன்று வந்தார்கள். இத்தாலிய நாட்டில் **லியோனார்டோ டி வின்சி (Leonardo de Vinci)** என்பவர் பறக்கும் யந்திரம் செய்யக்கூடிய வழிகளை ஆராய்ந்துகொண்டிருந்தார். ஆனால், நார்மன் ஜாதியார் இங்கிலாந்தைப் பிடித்ததற்கு முன்னமே ஆங்கிலச் சந்நியாசி ஒருவர் ஸ்பெயின் தேசத்திற் பறக்க முயன்றதாக ஒரு கர்ணபரம்பரையான கதை வழங்கி வருகிறது. உண்மையில் 1783ம் ஆண்டிற்றான் ஆகாயத்திற் பறந்துசெல்லத் திட்டமான முயற்சி நடந்தது.

## புகைக் கூண்டு

பிரான்சு தேசத்தில் **மான்ட்கோல்வியேர் (Montgolfier)** என்னும் காகித வியாபாரி ஒருவர் இருந்தார். அவருடைய பிள்ளைகள் இருவரும் புகைக்கூண்டு ஒன்று செய்து, அதில் ஆடு, கோழி, வாத்து ஆகிய மூன்றையும் கூடை ஒன்றில் வைத்துக்கட்டி அதை மேலே பறந்துபோகும்படி விட்டனர். இக்கூண்டு இவைகளைத் தூக்கிக்கொண்டு, மனிதன் பறக்க முயற்சி செய்வதற்கு முன்னமே ஆகாயத்தில் தெரியாத இடங்களில் எல்லாம் 1500 அடி உயரம் அலங்காரமாய்ப் பறந்து அந்த உயரத்திற் சிறிது நேரம் தங்கியிருந்து பின்பு மெதுவாகக் கீழே இறங்கியது.

அதே ஆண்டில் பறப்பதற்கு மற்றொரு முயற்சி நடந்தது. அப்போது ஆராய்ச்சி செய்துகொண்டிருந்தவர்களாகிய எம். ரோஸியர் (M. Ro ier) என்பவரு மேஜர் ஆர்லாண்டி (Major Arlande) என்பவரும் புகைக் கூண்டில் ஏறிச் சென்றனர். ஆயிரக்கணக்கான ஜனங்கள் இத் துணிகரமான செயலின் முடிவு என்ன ஆகும் என்று ஆவலாய் எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள். ஆ ாய கமனிகள் முகமலர்ச்சியோடு தங்கள் தொப்பிகளை எடுத்து ஆட்டிக்கொண்டே சென்றார்கள். இவர்கள் அரைமணி நேரம்



புகைக் கூண்டு

ஆ ாயத்தில் இருந்தார்கள். இப்புகைக் கூண்டு தரை மட்டத்துக்குமேல் 3000 அடி உயரம் சென்றது.

1783 ம் ஆண்டிற்றான் பறப்பதற்கு விய கத்த முயற்சிகள் நடந்தன. மூன்றாம் முயற்சி நடந்த இம்முறையில் பிரான்சு தேசத்தவராகிய ாா்ல்ஸ் என்பவர் கூண்டில் ஜலவாயுவை நிரப்பி அதில் ஏறிச்சென்றார். புை க் கூண்டு கண்டுபிடிக்கப்பட்டதும், இதன் உதவியால் சிலர் இங்கிலீஷ் கால்வாயையும் கடந்தனர். இதற்குப் பின்பு, பிரான்

சில் பு க் கூண்டிற் பறப்பதைப்பற்றிய ஆராய்ச்சிகள் அதிகமாக நடந்தன. அநேக பிரான்சு விஞ்ஞான லைஞர்கள் ஆகாயத்திற் பறந்தும் பார்த்தார்கள்.

## ஆகாய விமானம

பத்தொன்பதாம் நூற்றாண்டில் சிலர் ஆகாயத்திற் பறப்பதைக் கைத்தொழில் வளர்ச்சிக்கும் செல்வ விருத்திக்குப் பயன்படுத்த எண்ணி ஆராய்ச்சி செய்தார்கள். இந்த நூற்றாண்டின் இறுதியில் கலைஞர்கள் மனிதன் பறக்கக்கூடிய வழிகளைக் கண்டார்கள். ஆயினும், இவ்வழிகளைப் பற்றிப் பலருக்கும் கருத்து வேற்றுமை மிகுதியாக இருந்ததால், அநேகர், 'மனிதன் பறப்பது முடியாத காரியம்' என்று அடிக்கடி சொல்லி வந்தனர்.

அமெரிக்காவில் இருந்த லாங்க்லி (Langley) என்னும் பேராசிரியர் மனிதன் பறப்பதைப்பற்றி வேறுவிதமான கருத்துக்கொண்டிருந்தார். அவர் 1887 முதல் 1900 வரை ஆகாயத்தில் நிலைக்குந் தன்மையைப்பற்றிய ( tability in the air) கொள்கைகளை (theorie ) ஆராய்ந்தும் அவைகளைப் பரிசோதனைகள் செய்தும் வந்தபின்பு நியூட்டனுடைய விதிகளை (laws) ஒட்டிய பழைய நம்பிக்கை முற்றிலும் பிழையானது என்று நிரூபித்துக் காட்டினார். 'ஆகாயத்தில் மேல்நோக்கிச் செல்லும் ஒரு பொருள் அதிமான எதிர்ப்புத் தன்மையை அடையவேண்டியதால் அதை மேலே போகச் செய்வதற்கு அதிகமான சக்தி வேண்டும்' என்று கூறிக்கொண்டிருந்தது உண்மை அன்று. பேராசிரியர் லாங்க்லி, 'ஆகாயத்திற் செல்லும் பொருள் வேகமாகச் சென்றால் அது விழாதபடி பாரத்தைச் சமப்படுத்திக்கொண்டு செல்லலாம்' என்று முன்னே கூறிய கொள்கைக்கு முற்றும் மாறாகப் பரிசோதனை செய்து விளக்கினார். தம்முடைய கொள்கை சரியானது

என்று காட்ட அவர் மாதிரி யந்திரங்களையும் செய்து காட்டினார். இப்படி அவர் பரிசோதனைகளால் நிரூபணம் செய்து காட்டியும் ஒருவரும் அவருடைய கொள்கையை யும் மனிதன் பறக்கக்கூடும் என்பதையும் நம்பவேயில்லை.

## ரைட் சகோதரர்கள்

அமெரிக்க ஐக்கிய நாட்டைச் சார்ந்த ஓஹியோ நாட்டில் உள்ள டெயிடன் (Dayton) என்னும் பட்டணத்தில் ஓர்வில் ரைட், வில்பர் ரைட் என்ற இரு சகோதரர்கள்



Photo: R' chg't

வில்பர் ரைட்

துவிச்சக்கரம் செப்பனிடும் சிறு தொழிற்சாலை ஒன்று வைத்திருந்தார்கள். இவ்விருவர் மாத்திரம் பேராசிரியர் லாங்க்லியின் கொள்கையை நம்பினார். இந்தச் சகோதரர்கள் விஞ்ஞான கலைஞர்கள் அல்லர். கல்லூரியிலோ சர்வ கலாசாலையிலோ படித்தவர்களும் அல்லர். ஆனால் எந்தச் சாமான்களையும் தாங்களே செய்துகொள்ளும் திறமை ய

யும், பொருள்களைக் கூர்ந்து நோக்குஞ் சக்தியையும், அவ சரமாகத் தீர்மானிக்கும் ஆத்திரம் இல்லாமையையும் ண்ட உண்மைகளைக் கடைசிவரைக்கும் பரிசோதிக்கும் ஆற்றலையும் பெற்றிருந்தார்கள். ஆகாயத்திற் பறப்பதைப் பற்றிய சாஸ்திரோக்தமான கொள்கைகளை அறியும் ஆற் றல் அவர்களுக்கு இல்லாமற்போயினும், அவர்கள் ஐரோப் பிய விஞ்ஞான சாஸ்திரிகளும் அமெரிக்க அறிவு நூலா ராய்ச்சியாளர்களும் அவ்வப்போது வெளியிட்டுவந்த பரி சோதனைகளைப் பற்றிய விவரங்களை அதிக ஆவலோடு படித்துவந்தார்கள்; இதனுடன் காற்று அசைவதையும் பறவைகள் பறந்து செல்வதையும் ஆராய்ந்துகொண்டு மிருந்தார்கள்.

விஞ்ஞான கலைஞர்களுடைய கொள்கைகளும் தாங்கள் கண்ட விஷயங்களும் ஒத்துவராமையால் ரைட் சகோதரர் கள் டல வருஷங்கள் வரைக்கும் சரியான முடிவுக்கு வரா மற் கலங்கி நின்றார்கள். கடைசியில் 1900 ம் ஆண்டின் ஆரம்பத்தில் அவர்கள் தங்கள் கருத்தின்படி விமானம் ஒன்று செய்து பறந்துபார்க்க உறுதி கொண்டார்கள். ஆகையால் இருவரும் வட கரோலினாவில் உள்ள கிட்டி ஹாக் என்னும் இடத்தில் காற்று நிலையாகவும் பலமாகவும் அடிப்பதைத் தெரிந்துகொண்டு 1900 ம் ஆண்டு அக்டோபர் மாதம் அங்குச் சென்று மலையுச்சியிற் கூடாரம் அடித்துத் தங்கியிருந்து காற்றின் தன்மைகளை ஆராயலானார்கள்.

இப்படி மூன்று ஆண்டுகள் பொறுமையாக உழைத் துக் காற்றின் தன்மைகளை உணர்ந்த பின்பு 1903 ம் ஆண் டின் இறுதியில் அந்த வீரசிகாமணிகள் தங்களுக்கா மணிக்கு முப்பதுமைல் போகக்கூடிய விமானம் ஒன்று செய்துகொண்டார்கள். அவர்கள் இந்த விமானத்தில் பறவை ளின் சிறகுகள் போன்ற சிறகுகளையும் திசை மாற்றுவதற்குப் பறவைவால்போன்ற சுக்கான்களையும்

அமைத்துவைத்தார்கள். தற் ா விமானங்களுக்கு இருப் ப த ஏறக்கு றய ஒத்திருக்கும் இடம் ஒன்று இதில் இர ' டு சிறகுகளுக்கும் நடுவில் வகுக்கப்பட்டிருந்தது.

உழைப்பின் வாரா —றுதிகள் —ளவோ ?' இல்லை இல்லை. கடைசியில் 1903 ம் ஆண்டு டிசம்பர் மாதம் 17 ந் தேதி ரட் சகோதரரில் ஒருவர் முதல்முதலாக இரு சிறை விமானத்தில் ஏறி வட கரோலினாவின் கடற்கரையிற் குளிர்ந்த காற்றிற் ட றந்து சென்றார் — க சரித்திரத்திலே முதல் முதல் தானக ஆகாயத்தில் எழுந்த இவ்விமானம் யாதொரு விடத்தும் இன்றி நான்கு முறை ஆ ாயத்திற்



[Photo: R chgit
By courte y of Science Mu um, South Ken ington
ரைட் சகோதரர்கள் செய்த ஏரோப்பிளேன்

பறந்தது. நான்காவது மு றயில் இந்த விமானம் நாற்பத் தொன்பது விநாடி ே ரம் ஆகாயத்தில் 850 அடி தூரம் இ டவிடாது பறந்து சென்றதாம். இப்போது ரட் சே ாதரர் ளுடைய முயற்சி வெற்றிபெற்றது. முயற்சி புடையார் இகழ்ச்சியடையார் என்பது பொய்யாகுமோ? சே ாதரர் ள் தங்கள் ெ ற்றியைக் கண்டு மகிழ்ந்தார் ளேனும் அவர்கள் அதைப்பற்றி விளம்பரப்படுத்தி ெ ாள்ளவில்லை. விலபர் கூறியபடி ஆ ாய விமானத்தில்

ஏறிச்செல்லும் காலம் கடைசியில் வந்துவிட்டது! ந்து விட்டது. முடியாத காரியமும் முடிந்துவிட்டது.

ரட் சகோதரர்களுக்கு உண்டான வெற்றியினாலும் 1914 18 ல் நடந்த ஐரோப்பிய மகா யுத்தத்தாலும் ஆகாய விமானக் கலையில் தீவிர முன்னேற்றம் ஏற்பட்டது. ரைட் சகோ ரர்கள் மிகவும் அடக்கமுள்ளவர்களாய் இருந்ததால் அ ர்கள் தங்கள் வெ ற்றியைப்பற்றிச் சமாச்சாரப் பத்தி ரி கைகளில் விளம்பரஞ் செய்துகொள்ளவில்லை. இதனால் அவர்கள் செய்த வேலையை உலகம் அறிவதற்கு நான்கு ஆண்டுகள் சென்றன. இதற்கு இடை யில் ஐரோப்பாவில் மற்ற நாடுகளில் இருந்த யந்திர விற்பன்னர்களும், அவர் ள் கொண்ட கொள்கையைக்கொண்டு அவர்கள் செய்த தப் போன்ற விமானங்களைச் செய்தார்கள். இதற் ர ரைட் சகோதரர்களுக்குப் 'பேட்டன்ட்' உரிமைப் பண மும் கி டைத்தது. வில்பர் ரைட் 1912 ல் இறந்தார். ஆனால், அவர் இறப்பதற்கு முன்னமே புகழும் பொருளும் அவரை அ டைந்துவிட்டன இவ்விரு சகோதரர்களும் உலகத்தில தங்களுடைய அழியாப் புகழை நிலைநாட்டிவிட்டார்கள். ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் உள்ள முக்கியமான ந டுகளி இருக்கும் சர்வகலாசாலைகளும் கலைக்கழகங்களும் அவர் ளை வரவழைத்துக் கௌரவப்படுத்தின.

1914 ம் ஆண்டு ஆ ஸ்டு மாதம் 4 ந் தேதி ஆரம்பித்த ஐரோப்பியப் பெரும்போரில் ஆகாய விமானம் பயங் ர மான போர்க் ருவிகளில் ஒன்றாக உபயோ ப்படுத்தப்பட டது இரு பக்கத்தினரும் இ த மக் ளை அழிக்கும் இழி ன தெ ழிலு க்குப் பயன்படுத்தினார்கள்.

## ஏரோபிளேன்

ஆகாய விமானத்தில் இருவகை உண்டு ஒருவகை ய நாம் ஏரோ பிளேன் என்கிறோம். ஏரோபிளேன் என்பது

காற்றை காட்டிலும் கனமான விமானம். தரையிலிருந்து மேலே எழவும் ஆகாயத்தில் தங்கவும் செலுத்தும் சாரதியின் இஷ்டம்போல் கீழே இறங்கவும் இதற்குச் சக்தி உண்டு. ஓராள் விமானம் முதல் சில டன் எ டயுள்ள பார்சல்களையும் கடிதங்களையும் ஆறு ஆட்களையும் ஏற்றிக் கொ ொ டு போகும் பிரயாண விமானம் வரையில் உள்ள எல் ா விமானங்களுக்கும் பறவைகளுக்கு இருப்பது போன்ற அ மப்பே உண்டு விரைவா ப் போ தற்கும் அதிக உயரம் எழுவதற்கும் காற்றை ெ ற்றி கொள் தற்கும் இதைவிட மேலானது இல்லை இப்போது விமானிகள் பலவித ஆச்சரியமான வேடிக்கைகளும் செய்கிறார்கள் மணி ஒன்றுக்கு முந்நூறு மைல் பறக்கிறார்கள் · சில கட்ட ட களின் மேல் சில க தூரத்திற் பறக்கிறார்கள்; கரணம் போடுகிறார்கள். இவ்வளவு திறமையும் இப்போது ஏற்பட்டு விட்டது.

## ஜேப்பலின்

ஆ ாயக் கப்பல் மற்றொருவகை ஆகும். இது ஜேப்பலின் எனப்படும். இது மிகவும் ஆச்சரியமானது. இது ஏறக்குறைய நீராவிப் படகுபோல் இருக்கும். இது புகை கூண்டிலிருந்து ந்த அபிவிருத்தி எனலாம். ஆனால், புகைக் கூ டைப்போல் இது காற்றடிக்கும் பக்கமாகப் போ வேண்டியதில்லை. அதிக வன்மை ள்ள எஞ்சின் இதில் இருப்பதால் இது ஆகாயத்தில் நாம் விரும்பும் திசைகளி ெ ல்லாம் போகும் · ஆனால் ஏரோபிளேனைப்போல கீழே வந்திறங்க முடியாது. இதில் உள்ள காற்றுவெளி வராத அ றுகளில் ாற்றை அடைத்ததும் இது அலங்காரமாக ஆ ாயத்திற் பறக்கும். உயர்ந்த கம்பத்தில் இ தக் ட்டி வக் வேண்டும். இந்த ஜெப்பலினிற் பிரயாணிகள் ஏறிச் செல்லவேண்டுமானால் அவர்கள் மின்சார ஏற்றத

தின் (electric lift) மூலமாய்க் கம்பத்தின் முனைக்குச் சென்று அதிலிருந்து ஜெப்பலினுள் நுழையவேண்டும்.

சமீபகாலம் வரைக்கும் இந்த ஆகாயக் கப்பல் பரிசோதனை நிலையிலே இருந்தது. முதல் முதல் பெரிய அளவில் ஆகாயக் கப்பலைச்செய்தவர் ஜெர்மன் யந்திர சாஸ்திர விற்பன்னராகிய ஜேப்பலின் பிரபு ஆவர். ஆகையால் அவருடைய பெயரால் ஆகாயக் கப்பல் ஜெப்பலின் என்ற




(R. A. F. Offici l: Crown copyr'ght re rved.

ஜெப்பலின்

பெயரால் வழங்கப்படுகிறது. சென்ற ஐரோப்பிய பெரும் போரில் ஜெர்மன் தேசத்தார் ஜெப்பலினைப் பிரான்சையும் இங்கிலாந்தையும் தாக்கப் பயன்படுத்தினர். ஆனால், இக்காலத்தில் இது பிரயாணிகளை ஏற்றிச் செல்ல உதவுகிறது. ஜெர்மன் தேசத்துப் பெரிய ெ ப்பலின்கள் ஒவ்வொரு முறையும் ஐம்பது பிரயாணிகளேயும் சாமான் ளையும் ஏற்றிக்கொண்டு அமெரிக்காவிற்குப் பலதரம பிரயாணஞ் செய்துள்ளன.

## ஆ ாய கமன முன்னேற்றம

உல த்தில் ஒரு தேசத்தார் மற்றொரு தேசத்தார்மேல் சந்தேகங்கொண்டு போட்டிபோடும் உணர்ச்சியைக் கொண்டிருத்தலால், ஆகாய கமன முன்னேற்றம் விரைந்து செல்கிறது என்று வருத்தத்தோடு குறிப்பிடவேண்டியிருக்கிறது. எல்லாத் தேசத்தாரும், 'ஆகாய விமானத்தின் —தவியால் போர் செய்ய முயல்வது பேரழிவை உண் ாக்கும்' என்று —ணர்ந்து வருகிறார்கள். ஒரு நாட்டின் விமானம் மற்றொரு நாட்டை அழிக்கமுயலும்போது அந் நாட்டு விமானம் எதிரி நாட்டை அழிக்க முயற்சி செ ் யும். ஆ ே இருநாடும் சேதமடையும்.

மேனாட்டினர் இத்தகை ய கஷ்டங்களை எதிர்பார்த்து ஆகாய கம க்கலையை விருத்திசெய்து வருகிறார்கள். இப்போது பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் முழுதும் ஆகாயவிமானப் போக்குவரத்தால் இணைக்கப்பட்டுவிட்டது. கராச்சிக்கும் லண்டனுக்கும் இப்போது ஆகாய விமானம் ஒழுங்காகப் போய் வந்துகொண்டிருக்கிறது. இன்னுஞ் சில வருடங்களுக்குள் பலர் ஆகாய விமானத்தில் இங்கிலாந்துக்குப் போவது சர்வசாதாரணமாகிவிடும். பிரயாணத்துக்குச் செலவாகும் காலத்தில் மூன்றில் இரண்டு பங்கு குறையும். மிகச் சமீப காலத்தில் இருப்பத்திரண்டு வயதுள்ள ஏமி ா (Amy John on) என்னும் ஆங்கிலப் பெண்மணி இங்கிலாந்திலிருந்து ஆஸ்டிரேலியாவிற்கு வெகு சீக்கிரத்தில் பறந்து சென்றதால், நாம் அதிகமான நெடுந் தூரத் தயும் நினைக்கமுடியாத மிகக் கு றுகிய காலத்தில் டந்துவிடலாம் என்று அறிகிறோம்.

இனி ருங் ாலத்தில் ஆகாயக் கப்பல்களும் ஆகாய விமானங் ளும் சீரிய நிலை ய அடையலாம். பற வ ள் அடர்ந்து போவதுபோல் மக் ளும் அடர்ந்து விமானத்திற் போவார் ள். ஆற்றி ) இன்பத்துக்காகப் படகை

ஓட்டுவதுபோல் ஆகாயத்தில் விமானங்களும் வேடிக்கை யாகச் செலுத்தப்படும். மக்களுக்குள் இருக்கும் பொறுமை ஒன்றே இந்த இன்பத்தைக் கெடுக்கலாம். இப் பொறுமையே பல தேசங்களில் ஆகாய விமானங்கள் அதி கரிப்பதற்குக் காரணமாயிருக்கிறது. எல்லா நாட்டினரும் மக்கள் நன்மைக்காக விமானங்களை அதிகரிக்காமல் அழி வுக்காகவே பெருக்குகிறார்கள்.

ஆனால், நாம் நம்பிக்கையை இழந்துவிடவேண்டுவ தில்லை. மனிதன் இக்குற்றத்தைச் செய்யத் தகுந்தவனே. நம்பிக்கையுள்ளவர்கள் நம்பிக்கையை இழக்கவேண்டுவ தில்லை.

## அத்தியாயம் V

# அதிசய சக்தி

## பண்டைக்காலமும் மின்சாரமும்

நீராவி யந்திரங்களும் மோட்டார் வண்டிகளும் ஆகாய விமானங்களும் மனிதனுக்கு அதிகமாகப் பயனை அளித்து வருகின்றன. ஆனால், மின்சாரம இவைகளைவிட மனித வாழ்க்கையில் மிகவும் முக்கியமானதாகிப் பெரும பயன் அளித்துவருவதை இன்றும் காணலாம். இந்த மின் சார சக்தியைப்பற்றி நமக்கு இன்னும் பூரணமான அறிவு ஏற்படவில்லை. நூறு ஆண்டுகளுக்கு முன்னே மின்சாரம் என்ன செய்யக்கூடும் என்பதை அறியாதிருந்தோம். இன்று மின்சாரத்தில் நடவாதது ஒன்றும் இல்லை என்று அறிவோம். மின்சார மாளிகையில் உள்ள நுண்ணிய ஊசியை எவ்வளவு இலேசாக இது தள்ளக்கூடுமோ அவ் வளவு எளிதாக நூறு சாமான் வண்டித்தொடரை இது தள்ளி மணிக்கு ஐம்பது மைல் வேகத்தில் இழுக்கிறது. மனிதன் மின்சாரத் தள்ளுபிடியைப் (witch) போட

வேண்டியதே தவிர வேறொன்றும் செய்யவேண்டுவ தில்லை. பிடியைப் போட்டதும் மின்சாரம் ஓடிவந்து வேலையை நடத்துகிறது. பிடியை மேலுக்குத் தள்ளியதும் அது கண்ணுக்குத் தெரியாது மறைகிறது.

இலக்டிரிசிட்டி என்னுஞ்சொல் கிரேக்கமொழி. இச் சொல்லுக்குக் கிரேக்கமொழியில் அம்பர் என்பது பொருள். அம்பர்த்துண்டு ஒன்றை அழுத்தித் தேய்த்து வைத்தால் அது இலேசான பொருள்களாகிய வைக்கோலை யும் உமியையும் இழுக்கும். கிரேக்கர்கள் இவ்விஷயத்தை முன்னமே அறிந்திருந்தார்கள். ப நூற்றாண்டுகளாக மின்சாரத்தைப்பற்றி இவ்விஷயந்தான் தெரிந்திருந்தது. அதற்குமேல் ஒருவரும் ஆராயவில்லை. இரும்பை இழுக்கக் கூடியதும் தொங்கவிட்டால் வடக்குத் திசையையே நோக் கிக் கொண்டிருப்பதுமாகிய காந்த ஊசியைப்பற்றியும் அக் காலத்தினர் அறிந்திருந்தனர்.

நெடுங்காலமாக மக் ளுக்கு மின்சாரத்தைப்பற்றியும் காந்தத்தைப்பற்றியும் இவ்வளவுதான் தெரிந்திருந்தது. விஞ்ஞான கலைஞர்கள் மின்சாரத்தை இன்னும் அதிகமாக ஆராய்ந்ததால் இப்போது நமக்கு அதைப்பற்றிய அறிவு அதிகமாக விருத்தியடைந்துள்ளது. ஆனால், பதினாறும் நூற்றாண்டிலிருந்து பத்தொன்பதாம் நூற்றாண்டின் ஆரம் பம் வரைக்கும் அதிகப்பயன்படக்கூடிய விஷயம் மின்சா ரத்தைப்பற்றி ஒன்றும் கண்டுபிடிக்கப்படவில்லை. மின்சார மும் அதன் மாய இயற்கையும் இன்னும் விஞ்ஞான கலைஞர் களுக்கு அறியாத விஷயங்களாகவே உள்ளன

## மின்சாரத் து றயில் உ ழத்தவர்கள்
## பெஞ்சமின் பிரா கிலின்

பெஞ் மின் பிராங்கிலின் அநேக ஆராய்ச்சிகள் செய்த பின்பு மேகத்திற் காணப்படும் மின்னலும் மின்சாரத்தை

ஒத்ததே என்று கூறினார். கலைஞர்கள் நெடுங்காலம் உழைத்து மின்சாரமும் காந்தமும் ஒன்றே என்றும் ஒன்றை மற்றொன்றாக மாற்றலாம் என்றும் கண்டுபிடித்தார்கள்.

## மைக்கல் பாரடே

இச்சிறு உண்மையைக் கண்டுபிடித்ததால் மின்சாரம் மனிதனுக்கு அதிக உபயோகமான இயக்குஞ் சக்தியாக ஏற்பட்டுவிட்டது. நம்முடைய மின்சாரசக்தி யந்திரமும் 'டைனமோ' என்னும் மின்சார ஜனனியும் இவ்வுண்மையைத் தழுவியே செய்யப்பட்டுள்ளன. மைக்கல் பாரடே (Michael Faraday) என்பவரே இந்த மிக முக்கியமான உண்மையைக் கண்டுபிடித்தவர். இவர் மிக எளிய குடும்பத்திற் பிறந்தவர்; தக்க வயது வந்ததும் புத்தகம் கட்டும் தொழில் (book binding) செய்தும் பத்திரிகை விற்றும் ஜீவனம் நடத்திவந்தார். இப்படியிருக்கும்பொழுது இவர் சில நண்பர்களுடைய உதவியால் அரசாங்க விஞ்ஞான சாஸ்திரக் கலாசாலையில் நடந்த உபந்நியாசங்களைக் கேட்க அனுமதி பெற்று அங்குச் சென்று அவ்வுபந்நியாசங்களைக் கேட்டு வந்தார். இவருடைய ஊக்கத்தையும் முன்னுக்கு வரக்கூடிய தன்மையையும் கலாசாலை அதிகாரிகள் கண்டு இவருக்கு அக்கலாசாலையின் பரிசோதனைச் சாலையில் உதவி யாசிரியர் வேலையைக்கொடுத்தார்கள். சுரங்க விளக்கைக் கண்டுபிடித்த ஸர் ஹம்ப்ரி டேவி (Sir Humphry Davy) என்னும் புகழ்பெற்ற விஞ்ஞான கலைஞரோடு அங்கே இவர் வேலை செய்துவந்தார். அப்பொழுதே இவர் ரசாயன ஆராய்ச்சியிற் சிறந்து புகழ்பெற்றிருந்தார். ஹம்ப்ரி டேவி வேலையிலிருந்து நீங்கியதும் இவர் அந்தக் கலாசாலையின் டிரெக்டராக நியமனம் பெற்றார். இவ்வேலைக்கு வருவதற்கு முன் இவர் மின்சாரத்தைப்பற்றிய ஆராய்ச்சி ஒன்றும்

செய்யவில்லை. இவ்வேலைக்கு வந்தபின்பே இவ்வாராய்ச்சியில் இறங்கினார். 1831 ம் ஆண்டில் இவர் அநேக பரிசோதனைகள் செய்து காந்தத்தையும் மின்சாரத்தையும் பற்றிய



மைக்கேல் பாரடே

பல உண்மைகளைக் கண்டுபிடித்தார். இவ்வுண்மைகளை அடிப்படையாகக் கொண்டுதான் மின்சார விசிறி மின்சாரத் தண்ணீர்ப் பம்புகள் முதலிய வகைளும், வீடுகளிலும்

தொழிற்சாலை எதிலும் ஏராளமாக உபயோகப்படும் மற்ற யந்திரங்களும் செய்யப்பட்டுள்ளன.

பாரடேயின் விஞ்ஞான ஆராய்ச்சித் திறமை நாடெங்கும் பரவியதும் ஆங்கில நாட்டிலும் பிறநாட்டிலும் உள்ள தொழிற்சாலை முதலாளிகள் அவரது ஆராய்ச்சித்திறமை வியாபாரத் துறையில் தங்களுக்குப் பயன்படுத்திக்கொள்ள நினைத்தார்கள்; அதற்காக அவருக்குப் பெரும்பொருள் அளிக்கவும் முன் வந்தார்கள். ஆனால், பாரடே இப்பொருளைத் தூசியாகக் கருதி அத்துறையில் உழைக்காமல் தம் வாழ்நாளை விஞ்ஞான கலை ஆராய்ச்சிக்கே அர்ப்பணம் செய்தார். பொருள் சம்பாதிக்கும் முயற்சியில் தம் காலத்தை வீணாகச் செலவிட மறுத்தார். இவர் தாம் கண்ட உண்மைகளை வியாபாரத் துறையிற் பயன்படுத்தியிருந்தால் குறைந்தது மூன்றுகோடி ரூபாய் இவருக்கு எளிதாகக் கிடைத்திருக்குமாம். இவர் பொருள் சேர்க்க ஆசை கொள்ளவில்லை; அறிவு நிதியைச் சேர்த்துவைக்கவே ஆவல்கொண்டார். வேறு விஞ்ஞான கலைஞர்கள் யாரும் இவரைப்போல் உண்மையைக் கண்டுபிடிக்கத் தன்னலமற்று உறுதியோடு உழைத்ததில்லை என்றே கூறலாம்.

பாரடேயின் காலத்திலிருந்து மின்சார ஆராய்ச்சி விரிந்துகொண்டே சென்றது. அநேக செயல்களும் பொருள்களும் மின்சாரத்தின் உதவியாலே நடைபெறுகின்றன என்று சொல்லவேண்டுவதில்லை. பேச்சுத் தந்தி மின்சாரத் தந்தி, அசைபடங்கள், ஆகாயத்தந்தி தூர சிரவணி (Wirele Telephone), மின்சார கதிர் (X R y ), மின்சார ரெயில்வண்டி, இன்னும் மின்சார யந்திரங்கள் ஆகிய இவைகளை இதற்குச் சில உதாரணங்களாகக் கூறலாம். இந்நாளிலே வாழ்க்கையில் எந்தத் துறையிலும் இந்தியாவில் அநேகமாய் எந்தப் பட்டணத்திலும் மின்சாரத்தால் நடைபெறாத கருவிகளை காணமுடியா. பின்வரும் அத்தி

யாயத்தில் ஆச்சரியமான மின்சார யந்திரங்களைப்பற்றிக் கூறுவோம். இங்கே மின்சாரம் என்ன என்பதைப்பற்றி யும், மற்றவர்களைவிட அநேக மின்சார யந்திரங்களைக் கண்டுபிடித்தவரைப்பற்றியும் சொல்வோம்.

## மின் ரரம

மின்சாரம் எல்லாப் பொருளுக்கும் அடிப்படை யாய் இருக்கிறது. மின்சாரம் இல்லாத பொருளே உலகில் இல்லை. குழாயிலிருந்து வரும் நீர்போன்ற மெல்லிய ஒரு வஸ்து கம்பிகளில் வருகின்றது என்றும், அது மின்சாரத் தள்ளுபிடி போட்டதும் மின்சார விளக்கு எரியும்படி செய்கின்றது என்றும், தந்திக் கம்பிகளின் மூலமாய்ச் சமாச்சாரத்தைக் கொண்டுபோகின்றது என்றும் சிலர் நினைத்தனர். அப்படி ஒன்றும் இல்லை. மின்சாரம் நீர் பொருள் அன்று. முன்னே சொன்னபடி மின்சாரம் என்பது எல்லாப் பொருள்களிலும் உள்ள சக்தி ஆகும். ஒரு பொருளை உடைத்து அணுக்களாகப் பிரிக்கலாம். அந்த அணுக்கள் ஒரு வகையாக வரிசைப்படுத்தப்பட்டுள்ள மின் சாரத் துணுக்குக்களால் ஆகியுள்ளன. இந்த அணுக்களில் உள்ள மின்சாரத்தை வெளிப்படுத்தினால் மின்சாரம் உண் டாகிறது. செம்பு, வெள்ளிபோன்ற உலோகங்களில் மின் சாரம் எளிதாக வெளிப்படுத்தப்படுகிறது; இதனாற்றான் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்கு மின்சாரத்தைக் கொண்டுபோகச் செப்புக்கம்பிகளை உபயோகிக்கிறோம். பீங்கான் போன்ற பொருள்களிலிருந்து மின்சாரத்தைக் கஷ்டப்பட்டு உண்டாக்கவேண்டும். ஆகையால், மின்சாரம் தரையில் இறங்காதபடி தடுக்கிற கருவியாகப் பீங்கான் உபயோகப்படுகிறது. நீங்கள் தந்திக் கம்பங்களின்மேல் பார்க்கின்ற கிண்ணம் பீங்கானாற் செய்யப்பட்டதே.

எடி ன்

இக்காலத்தில் விஞ்ஞான கலைஞர்களு குள் இரு வகைக் கொள்கையினர் உண்டு. டாமசன் (Thom on), ராண்ட்ஜென் (Rontgen) ருதர்போர்ட்(Rutherford) ஆகிய இவர்களைப்போன்ற ஒரு சாரார், பொருள் (matter) சக்தி (energy) பிரபஞ்சம் (universe) என்பவற்றின் உண்மை களை ஆராயமுயன்று வருகின்றனர். உண்மையை உண்மைக் காகக் கண்டுபிடித்தல்வேண்டும் என்பது இவர் களுடைய கொள்கை. மற்றொரு சாரார் எடிசன் என்ப ரைப் போன்ற ர்கள். இவர்களுடைய கருத்து இயற்கையின் சக்தியை மனிதனுடை ய வேலையைச் செய் திற் பயன் படுத்திக்கொள்ளவேண்டும் என்பதே. நாம் ருதர்போர்ட் போன்றவர்களின் முயற்சியைச் சொல்லவேண்டுவதில்லை. ஏனென்றால் அது நமக்கு விளங்குவது ஷ்டம். அவர் ள் சொல்வதை நம்மைப் போன்றவர்கள் அறிதல் முடியாது. ஆனால் நாம் எடிசனைப்பற்றியும் அவர் நமக்காகச் செய்த வைகளைப்பற்றியும் அறியலாம். அவர் மக் களுடைய இன் பத்தைப் பெருக்கினார். அவர்தாம் நமக்கு ஒலி பரப்புக் கருவியையும் (R dio), திரைப் படத் தையும் (Cinema) நம்முடைய வீடு ளில் இரவைப் ப லா கும் மின்சார அதிசய விளக்கையும் அளித்தவர்.

எடிசன் நிறைந்த வன்மையும் மிகுந்த பொது அறிவும் வாய்ந்த உண்மை அமெரிக்கர் என்று சொல்லவேண்டும். அவர் யாவருக்கும் தெரிந்த விஞ்ஞான விதிகளைக்கொண்டு அநே பொருள்களைக் ண்டுபிடித்தார். தினசரி வாழ் கைக்கு அவசியமானவற்றில் தம் கவனத்தைச் செலுத்தி வந்ததோடு விஞ்ஞான அறிவு முன்னேற்றத்திலும் அவர் சிரத்தை ாட்டிவந்தார். சலியாத பொறுமையோடு கஷ் டப்பட்டு உழைத்து வந்ததால் அவருக்குப் புதுப்பொருள்

கண்டுபிடிக்கும் பேரறிவாற்றல் மிகுந்திருந்தது. இவ்வரிய குணத்துக்கு உறைவிடமாயிருந்ததனுற்றான் அவர் வெற்றி மேல் வெற்றியுற்றார். ஓரம்சம் கருவிலே அமைந்த திருவாலும், தொண்ணூற்றென்பது அம்சம் பெருமுயற்சியாலும் உண்டாவதே பேரறிவாற்றல் (genius) என்பது அவரது முழுநம்பிக்கை. ஒன்றைப்பற்றி ஆராய்ந்துகொண்டிருந்தாலும், கண்டுபிடித்த பொருளைச் செம்மைப்படுத்திக் கொண்டிருந்தாலும், அவர் பல நாட்களாகத் தூங்காமலே வேலை செய்வார். எறக்குறைய எண்பதாவது வயதிலும் அவருடைய இடைவிடா ஊக்கம் அவரிடத்திலிருந்து குறையவில்லை. அவருடைய வாழ்க்கை மிகவும் ஆச்சரியமானது. அவருடைய வரலாறு நமக்குள்ள ஆற்றல்களை விருத்திசெய்ய வழிகாட்டும் என்பதில் ஐயமில்லை.

எடிசன் அமெரிக்க ஐக்கிய நாடுகளைச் சார்ந்த ஒரு பகுதியான ஈரி ஜில்லாவிலுள்ள மைலன் என்னும் சிறு பட்டணத்தில் 1847 ம் ஆண்டு பெப்ருவரி மாதம் 11 ந் தேதி பிறந்தார். அவருடைய தந்தையார் சாமுவேல் எடிசன் ஆவர். தாயார் நான்சி என்னும் பெயர் வாய்ந்தவர். எடிசன் சின்னஞ் சிறு பருவத்திலேயே எதையும் ஆழ்ந்து நோக்கும் சிந்தனையுடையவராய் விளங்கினார். இளைஞரான எடிசன் எதையும் அறிய ஆவல் கொண்டிருந்ததால் அவர் ஆசிரியரைக் கேள்விமேல் கேள்வி கேட்கவே, அந்த ஆசிரியர் எடிசனை மடையன் என்றே நினைத்துவிட்டார். ஆகையால், சில வருடங்கள் ஆசிரியராக இருந்த நான்சி அம்மையார் எடிசனை இரண்டரை மாதங்களுக்குப் பின்பு பள்ளிக்கூடத்திலிருந்து நிறுத்தி, வீட்டிலேயே அவருக்குக் கல்வி கற்பித்து வந்தார். எடிசனும் வெகு சீக்கிரத்தில் கல்வியில் முன்னேறித் தம்முடைய வீட்டில் ஓர் அறையிற் சிறு பரிசோதனைக்களம் ஒன்றும் ஸ்தாபித்துவிட்டார்.

எடிசன் பன்னிரண்டு வயதிலேயே வாழ்க்கையை ஆரம்பிக்க உறுதிகொண்டார். அன்று முதற்கொண்டு அவருடைய வாழ்க்கை தொடர்ச்சியான முயற்சியுடையதாகவே இருந்தது. நாம் அவர் செய்த முயற்சிகள் அனைத்தையும் இங்கு விவரித்துரைத்தல் முடியாது. அவருடைய வாழ்க்கையில் மாறுதல் உண்டாக்கிய ஒரு நிகழ்ச்சியை மாத்திரம் கூறுவோம். எடிசன் 1869 ம் ஆண்டில் வசந்த காலத்தில் சிறிது காலம் வேலையில்லாமற் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்தார். அப்போது சந்தைக் கடைகளில் உள்ள பொருள்களின் விலைவாசிகளைக் கேட்டுத் தரகர் காரியாலயங்களுக்குச் சொல்வதையே முக்கியமான வேலையாகக் கொண்ட தந்தி சமாச்சாரக் கம்பனியின் உத்தியோகஸ்தரைக் காண அவர் நியூயார்க்குக்குச் சென்று ஓரிடத்தில் அமர்ந்திருந்தார். அவர் போயிருந்தபொழுது அந்தக் காரியாலயத்தில் இருந்த தந்திக்கருவி திடீரென்று நின்றுவிட்டது. இரண்டு நிமிஷங்களுக்கெல்லாம் காரியாலய வேலைக்காரச் சிறுவர்கள் முந்நூறு பேர் இத்தந்திக் காரியாலயத்தின் முன்னே கூட்டமாகக்கூடிக் கூச்சலிட்டுக்கொண்டும், ஒருவரை ஒருவர் தள்ளிக்கொண்டும் இருந்தார்கள். அத்தந்திக் கருவியை நடத்திக்கொண்டிருந்தவன் மனங்குழம்பி ஒன்றுஞ் செய்ய முடியாது திகைத்து நின்றான். காரியாலயத்தின் மேலதிகாரி மனக்குழப்பத்தோடும் கோபத்தோடும் வேலைக்கிருகத்துள் நுழைந்தார். எடிசன் மெதுவாக அக்கருவி இருந்த இடஞ்சென்று அதைச் சாவதானமாக உற்றுப்பார்த்து அதன் பாகங்களையெல்லாம் கூர்ந்து நோக்கிக் கருவியில் இருந்த பிழையைக் கண்டுகொண்டார். உடனே அவர் கலங்கி நின்ற அதிகாரியை அணுகி, 'இந்த யந்திரங்கள் ஓடாமைக்குக் காரணம் அறிவேன். பற்களுள்ள உருளை ஒன்று, அதைப்போன்ற மற்றோர் உருளையைச் சுற்றும் இடத்தின் அருகில் இருக்க வேண்டிய ஒரு சுருள் கம்பி,

ஒடிந்து, இரு சக்கரங்களுக்கும் இடையில் விழுந்து ஓட்டத்தை நிறுத்திவிட்டது' என்று கூறினர். சமாச்சாரத் தடையால் வெளிக் கூச்சல் அதிகரிக்க அதிகரிக்க அந்த அதிகாரி எடிசனை நோக்கி, 'சீக்கிரம் சாமானைப் போட்டுச் சரிப்படுத்து. சரிப்படுத்து.' என்று கத்தினர்.

சிறிது நேரத்துக்குள் எடிசன் தந்திக் கருவியைச் சீர்ப்படுத்தி முன்போல் வேலைசெய்யச் செய்தார். வெளியே இருந்த கூச்சல் நின்றுவிட்டது; மேலதிகாரி புன்னகை பூத்தனர். எடிசன் வேலைக்குப் பொறுமையோடு காத்துக் கொண்டிருந்தார். அந்த மேலதிகாரியாகிய டாக்டர் லா (Dr. Law) என்பவர் எடிசனைக் கூர்மையாக நோக்கி அவரைப் பல கேள்விகள் கேட்டு அவருடைய சிறந்த அறிவுத் திறமையைத் தெரிந்துணர்ந்து, உயரவேண்டும் என்னும் பேராவல் கொள்பவனுக்கும் கிடைக்க முடியாத முந்நூறு டாலர் மாதச் சம்பளமுள்ள வேலையை அவருக்குக் கொடுத்தார். எடிசன் இதைப்பற்றிக் கூறும்போது, இது அடைய முடியாத மிகப்பெரும் பாக்கியமாக இருந்ததால், நான் சிறிது நேரம் ஒன்றுஞ் செய்யமுடியாமல் நின்று விட்டேன். இது நெடுநாள் நில்லாது. ஆனல் ஒரு நாளையில் இருபது மணிநேரம் பெருங்கஷ்டப்பட்டு வேலை செய்ய வேண்டியிருந்தாலும், இந்தச் சம்பளத்தை எப்போதும் வாங்குவதற்கு நான் அவ்வளவு நேரமும் வேலை செய்ய உறுதி செய்துவிட்டேன்' என்று ஒருமுறை சொல்லியுள்ளார்.

சில வருஷங்கள் அவர் மிகவும் கஷ்டப்பட்டு வேலை செய்தார். இதற்குமுன் அவர் அவ்வளவு கஷ்டப்பட்டதில்லை. அவர் தமக்கெனப் பரிசோதனைக்களம் ஒன்று ஏற்படுத்திக்கொண்டு தமக்கு ஒழிந்த நேரமெல்லாம் அதில் பரீட்சைகள் நடத்திவந்தார். தூக்கத்தைப்பற்றிச் சிறிதும் கவலைப்படாமல் நெடுநேரம் அடிக்கடி வேலை செய்து வந்தார்.

இப்படிப் பல மாதங்கள் உழைத்துத் தந்திக்கருவிகளில் பல சீர்திருத்தங்கள் செய்து அவற்றிற்காக அதிகார உரிமையும் பெற்றார். இருமடித் தந்திக்கருவி (Duplex Telegraphy) அச்சீர்திருத்தக் கருவிகளில் ஒன்றாகும். இக்கருவியினால் ஒரே காலத்தில் ஒரே கம்பியில் இரு செய்திகள் அனுப்பக் கூடும். ஒரு நாள் தந்திக் கம்பனியின் தலைவர் ஒருவர் அவரை வரவழைத்து, 'ஐயா, நீங்கள் புதிதாகக் கண்டு பிடித்துச் செய்தவைகள் எல்லாவற்றையும் எங்கள் கம் பனிக்கு உரிமையாக்க நினைக்கிறேன். நீர் அவ்வுரிமை யைக் கொடுத்துவிடுவதற்கு உமக்கு எவ்வளவு வேண்டும்?' என்று கேட்டார். தாம் உண்டாக்கியவற்றிற்கு ஐயாயிரம் டாலர் பெறுவது தகுதியாகும் என்று எடிசனுக்குத் தோன்றிற்று. ஆயினும் மூவாயிரத்துக்கு விற்றுவிடுதல் நலம் என்ற எண்ணமும் உண்டாயிற்று. சொல்லவேண் டிய சமயத்தில் அவ்வளவு பெரிய தொகையைக் கேட்க அவருக்கு நா எழவில்லை. ஆகையால் அவர் அத்தலைவரை நோக்கி, 'நீங்கள் என்ன தொகை கொடுப்பீர்கள்?' என் றார். அத் தலைவர், நாற்பதினாயிரம் டாலர் பொருத்த மான தொகையா?' என்று கேட்டபோது அவர் ஆச்சரி யத்தால் திகைத்தாரேனும் ஒன்றையும் வெளிக்காட்டா மல், சரி பொருத்தமானதே' என்று பதிலுரைத்தார். இந்த நிகழ்ச்சியைக்குறித்து எடிசன் கீழ்வருமாறு கூறி யுள்ளார்: 'நான் ஐயாயிரம் டாலர் கேட்க இருந்தேன். முடியாவிட்டால் மூவாயிரம் டாலருக்கு ஒப்புக்கொள்ள நினைத்தேன். தொகையைக் குறிப்பிடவேண்டிய சமயத் தில் அவ்வளவு பெரிய தொகையை எப்படிக் கேட்பது என்று கருதி, 'நீங்களே சொல்லுங்கள் என்று அவரைக் கேட்டேன். அவர் நாற்பதினாயிரம் டாலர் கொடுத்தால் ஒப்புக்கொள்வாயா?' என்று கேட்டபோது அவர் கூறி யது என்னைத் திகைக்கும்படி செய்துவிட்டது.' என் இரு

